Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 319, 320

ஆசிரியர் P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி – ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975௵ தை, மாசி

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது பத்ராதிப ஸ்வாமி இரண்டு மாதகாலமாகத் திருமேனி பாங்கில்லாம லிருப்பதால் பத்திரிகை வெளிவரத் தாமதமானதுமல்லாமல் தொடர்ந்து வெளி வந்துகொண்டிருக்கிற "திவ்யப்ரபந்த மஹாநிதி" முதலிய விஷயங்களும் நின்றிருக் கின்றன. அடுத்த மாதம்முதல் எல்லாம் ஒழுங்காய் வெளிவருமென்று நம்பியிருக் கின்றோம். 'ஸ்ரீபாஷ்ய ஸாராம்ருதம்' என்னும் க்ரந்தமொன்றையும் ஸ்ரீஸ்வாமி இப்போது பதிப்பித்துள்ளார். வடமொழியறியாதாரும் ஸ்ரீபாஷ்யத்தின் ஸாரத்தை உணர்ந்துய்யும் வண்ணம் இந்நூல் அமைந்துள்ளது. ரூ. இரண்டு M. O. செய்பவர் கட்குப் புத்தகம் அனுப்பப்படும்.

*தி. அ. அனந்தாழ்வான்.*

—x—

# புது டில்லியில் திருமங்கையாழ்வார் ப்ரதிஷ்டைக்கு நன்கொடை

# ஒரு வேண்டுகோள்

[ஸ்ரீமான் *A. ராமாநுஜாசாரியர்*, B.A., 60, பெருமாள் கோயில் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15]

'ஸ்ரீராமாநுஜன்' 317ல் தில்லி ஸ்ரீராம மந்திர் என்ற சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதியில் ஸ்ரீ நம்மாழ்வார் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டை 25—10—74ல் நடந்தது பிரசுரிக்கப்பட்டது. அச்சமயம் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளும் ஸ்ரீமான் உ. வே. காஞ்சீ ப்ர. ப. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளும் தங்கள் மங்களாசாஸன ஸ்ரீமுகங்களில் யோசனை கூறியபடி இப்போது ஸ்ரீ திருமங்கையாழ்வாரின் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டைக்கு ஸ்ரீமான் E. வைகுண்டமையங்காரை ஆர்கனைசராகக் கொண்ட ஒருகமிட்டி மூலம் ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன. எடமணல் (சீர்காழி) வாசியான ஸ்ரீமான் ராமசந்திரநாயுடு, (அட்வகேட்)அவர்கள் ப்ரயத்னத்தின் பேரில் ஸ்ரீ விஜயராகவலு நாயுடு சாரிடியார் விக்ரஹ உபயம் செய்வதாக ஒப்புக்கொண்டு, கும்பகோணத்தில் பிரதிஷ்டை நடந்துகொண்டிருக்கிறது. மேலும் அவதாரஸ்தல மான குறையலூரிலும் திருநாங்கூர் திவ்யதேசங்களிலும் திவ்யமங்கள விக்ரஹத் திற்கு மரியாதைகள் செய்வித்து தலைநகருக்கு எழுந்தருளப்பண்ணி ஸம்ப்ரோக்ஷ ணம்செய்ய ரூ. 2.000-க்குக் குறையாமல் ஆகலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இப் புனித கைங்கர்யம் பாகவதோத்தமர்களின் தாராள பொருளுதவியால்தான் நிறைவேறவேண்டும். அவர்கள் நன்கொடைகளை ஸ்ரீ E. வைகுண்டமையங்கார், ஸ்ரீராமமந்திர், லோடி ரோட், ந்யூ டில்லி-3 என்ற முகவரிக்கு அனுப்பும்படி பிரார்த் திக்கப்படுகிறார்கள்.

# ஸ்ரீ ராமாநுஜன்—319, 320





ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியர்.**

ஸம்புடம் 27 | ஆனந்த ஸ தை, மாசி *1—3—75* | ஸஞ்சிகை 7, 8


## என்பால் அன்பார்ந்தவர்கட்கும் எனது அன்பர்கட்கும் தெரிவிப்பது

1964-ஆம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் திருவல்லிக்கேணி தேவஸ்தானத்தில் தொடர்ச்சியாக உபந்யாஸங்கள் நடந்துவந்தபோது 21-ஆம் தேதி ஹ்ருதயகோச வேதனை ஏற்பட்டு அப்போது பயங்கரமான நிலைமையிருந்தது அன்பர்களுக்கு நினைவிருக்கும். அப்போது பகவத் பாகவத ஆசார்யக்ருபையினால் ஒன்றிரண்டு மாதங்களில் ஸ்வாஸ்த்யம் ஏற்பட்டது. ஆனாலும் சனி ஞாயிறுதோறும் சென்னையில் நடந்துவந்தவுபந்யாஸம் அறவே நிறுத்தப்படநேர்ந்தது. தவிர, என்னுடைய க்ருஹத்தில் இரண்டாவது மூன்றாவது மாடிகளில் நான் இருப்புவைத்துக்கொண்டிருந்தபடியால், படியேறுவது கூடவே கூடாது என்னும் டாக்டர்களின் கடுமையான உத்தரவின் பேரில் அன்று முதலாக க்ருஹத்தில் வாஸம் விடப்பட்டு எனது பாடசாலைக்கடுத்த ராமாநுஜ கூடத்தில் வாஸம் வைத்துக்கொள்ள நேர்ந்தது. இது பத்து வருஷமாகி விட்டது. நேற்று மார்கழி மாதத்தில் சென்னையில் நான் வசித்தபோது எனக்கு ஏற்பட்ட தேஹஅசௌக்கியம் சென்ற 318 இதழில் தெரிவிக்கப்பட்டுள்ளது. விளையாட்டுப்போல் 50 நாள் ஆகிவிட்டது. "தத்சாந்திரௌஷதைர் தானைர் ஜபஹோமஸுரார்ச்சனை:" என்கிறபடியே எதிலும் குறையில்லாமல் நடந்துவருகிறது.

தினமணி பத்திரிகையின் Sub-editor சிலநாட்களுக்குமுன் என்னைக்காண இவ்விடம் வந்திருந்தார். தேஹாரோக்யத்தைப்பற்றிக் கேட்டார். "சுமாராகிக் கொண்டிருக்கிறது" என்று பதில் சொன்னேன். அதை அவர் அப்படியே பத்திரிகையில் (10—2—75) வெளியிட்டுவிட்டார். அதனால் அன்பர்கள் ஸந்தோஷக கடிதங்களை தினப்படி எழுதிவருகிறார்கள். ஸந்தோஷாதிசயத்தினால் அவரவர்கள் செய்து வருகிற மங்களாசாஸனம் பேரருளாளன் பெருந்தேவி மணாளன் க்ருபையினால் பலித்துவரவேணும். தேஹத்தில் வ்யாதியொன்றுமில்லை. இடையென்று ஏற்பட்ட அசக்தி தவிர வேறு நினைப்பதற்கில்லை.

---

ஸ்ரீரஸ்து

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமியின்

## ஆனந்த வருஷம் பங்குனி விசாக

# மஹோத்ஸவத்தின் பிரகடனம்

ஸ்ரீமத் உபயவே. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளின் எண்பத்து நான்காவது திருநக்ஷத்ர பூர்த்தி மஹோத்ஸவம் நிகழும் மாசிமீ விசாகம் முதற்கொண்டு பங்குனி விசாகம் அளவாக கீழ்க்கண்ட விவரப்படி திருமாளிகையில் நடைபெறும். **3—3—75** முதலாக **30—3—75** வரை அதாவது மாசி 19ம் தேதி திங்கட்கிழமை முதலாகப் பங்குனி மாதம் 16ம் தேதி விசாகம் (ஞாயிற்றுக்கிழமை) அளவாக கீழ்க்கண்டபடி நடைபெறும்

1. திங்கள். திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து
2. செ. இரண்டாம்பத்து
3. பு மூன்றாம்பத்து
4. வி. நான்காம்பத்து
5. வெ. பெரியாழ்வார் திருமொழி சாற்றுமுறையும் திருப்பாவையும்
6. ச. நாச்சியார் திருமொழி
7. ஞா. பெருமாள் திருமொழி
8. தி. திருச்சந்த விருத்தம்
9. செ. திருமாலை-முதலாயிரம்பூர்த்தி
10. பு. முதல் திருவந்தாதி
11. வி. இரண்டாம் திருவந்தாதி
12. வெ. மூன்றாம் திருவந்தாதி
13. ச. நான்முகன் திருவந்தாதி
14. ஞா. திருவிருத்தம்
15. தி. திருவாசிரியம் பெரிய திருவந்தாதி
16. செ. திருவெழுகூற்றிருக்கையும் சிறிய திருமடலும்
17. பு. பெரிய திருமடல்
18. வி. பெரியதிருமொழிதொடக்கம்

பங்குனி 7ம் தேதி (21—3—75) முதலாக காலை வேளைகளில் பெரிய திருமொழி ஸேவை. இரவு வேளைகளில் திருவாய்மொழி ஸேவையும் வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். பங்குனி 16ம் தேதி காலை பெரிய திருமொழி சாற்றுமுறையும் அன்று மாலை திருவாய்மொழி சாற்றுமுறையும் நடைபெறும். மறுநாள் காலை இராமாநுச நூற்றந்தாதி உபதேச ரத்தினமாலை ஸேவை சாற்றுமுறை நடைபெறும். பிற்பகல் 3 மணிக்கு ஸம்பாவனையும் வித்வான்களின் உபந்யாஸமும் நடைபெறும். தினப்படியாக வேதபாராயணமும் நடைபெற்று வரும். பங்குனி மாதம் 7ம் தேதி முதல் வழக்கப்படி திருவீதி ப்ரதக்ஷிண பாராயணம் நடைபெறும்

இங்ஙனம்

29, தென்னண்டை மாடவீதி,
சின்ன காஞ்சீபுரம்.

செல்லமணி என்கிற **P. B. ரங்கநாதன்.**



ஸ்ரீராமாநுஜன்—அநுபந்தம்

திருமலை திருப்பதி. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

பெரிய ஜீயர்ஸ்வாமி திருநாடலங்கரித்தருளினர்.

இந்த ஸஞ்சிகை அச்சாகி பைண்டிங் நடந்துகொண்டிருக்கையில் மிகவும் சோசநீயமான செய்திகள் கிடைத்தன. (1) திருவேங்கடச் செல்வனுக்கு ஒழிவில் காலமெல்லாம் வழுவிலாவடிமை செய்துவந்த திருமலை திருப்பதி பெரிய கேள்வி யப்பன் பெரிய ஜீயர்ஸ்வாமி (16—4—75) திருநாடலங்கரித்தது ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு ஈடுசெய்யமுடியாத நஷ்டமே. திருவேங்கடத்துறை செல்வன் தகுந்த அதிகாரியைத் தேடிக்கொள்ளவேணும்.

श्रीस्वामिपादानां चरमश्लोकः

अब्दे राक्षसनाम्नि धाम्नि महसां मेषं गते पाण्डरे
पक्षे पाञ्चमिके तिथौ बुधदिने काञ्चीमुनीन्द्रोडुनि ।
श्रीमद्वेङ्कटनाथ पादकमलद्वन्द्वैकदास्योज्ज्वलः
स्वामी ज्येष्ठयतीश्वरो यतिपतेः पादारविन्दे अगात् ॥
राक्षसाब्दमेषमासि शुक्लपञ्चमीतिथौ
सोमसूनुवासरोपपन्न काञ्चिपूर्णभे ।
श्रीवृषाद्रिनाथपाद नित्यकैंकरीरतो
ज्येष्ठयोगिराडगात् वरोपयन्तृयोगिनम् ॥

(2) மற்ருெரு மஹானுடைய பரமபதப்ராப்தியையும் அறிவிக்க ப்ராப்த மாகிறது. திருநாங்கூரில் விளங்கிய ஸ்ரீமதுபயவே. எம்பார் வட்டமணி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி நேற்றைய அமாவாஸ்யையன்று திருநாடலங்கரித்த தறிந்து மிக வருந்துகின்ருேம். ... .... ....

(3) தில்லைத்திருச்சித்திரகூடம் ஸ்ரீகோவிந்தராஜஸ்வாமி தேவஸ்தான நிர்வாஹகராக விளங்கிய ப்ரபல வக்கீல் ஸ்ரீமதுபயவே. விஞ்சிமூர் க்ருஷ்ணமா சார்யஸ்வாமி பரமபதித்த செய்தியையும் துக்கங்களுக்குமேல் துக்கமாகத் தெரி விக்கலாகிறது. .... .... ... ....

## முன்னுள் ஜனதிபதியின் மறைவு.

முன்னுள் ஜனதிபதி ஸ்ரீமான் ராதாக்ருஷ்ணன் அவர்கள் மறைவின் காரணமாக உலகமே துயரக் கடலில் ஆழ்ந்துள்ளது. (P. B. A.)



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியருடைய

# ★ பகவத் பரத்வ ஸௌலப்யோபந்யாஸம். ★

திருவரங்கம் பெரிய கோயிலுக்கு ஸந்நிஹிதமான ஆமூர் அக்ரஹாரத்தில் ஸன்னிதி ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவ வித்வத் ஸதஸ்ஸில் (26-1*75) அன்பர்கள் அநுபவிக்க உபஹரிக்கப் பட்டது.

நம்மாழ்வார் திருவாய்மொழிக்கு (1-2-11ல்) * சீர்த்தொடையாயிரம் * என்று ஒரு திருநாமம் சாற்றியுள்ளார். உலகில் பூமாலை தொடுப்பவர்கள் பலவகைப் புஷ்பங்களை வைத்துக்கொண்டு அவற்றையிட்டுத் தொடுக்குமாபோலே ஆழ்வார் தமது செந்தமிழ்ச் செஞ்சொல் மாலையை எம்பெருமானது பலவகைத் திருக்கல்யாண குணங்களையிட்டுத் தொடுத்தருளினர். அவை பரத்வ ஸௌலப்யங்கள்.

"நால்வர் கூடி நான்கு பிள்ளைகள் பெற்றனர்; நால்வர்கூடி ஒரு பிள்ளையைப் பெற்றனர்; அறுவர்கூடி ஆயிரமாயிரம் பிள்ளைகளைப் பெற்றனர்" என்றொரு விநோதவசனமுண்டு. (1) நால்வர்கூடி நான்கு பிள்ளைகள் பெற்றது ஸ்ரீராமாவதாரத்தில். (2) நால்வர்கூடி [வஸுதேவ தேவகீ நந்தகோப யசோதைகள்கூடி] ஒரு பிள்ளையைப் பெற்றது ஸ்ரீ க்ருஷ்ணவதாரத்தில். இவ்விரண்டும் ப்ரஸித்தம். அறுவர்கூடி ஆயிரமாயிரம் பிள்ளைகள் பெற்றதைக் கூரத்தாழ்வானருளிச்செய்கிறார். *ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்* என்று தொடங்கி *ப்ரவர குணஷட்கம் ப்ரதமஜம் குணநாம் நிஸ்ஸீம்நாம் கணநவிகுணநாம் ப்ரஸவபூ:* என்று. ஜ்ஞானம் பலம் ஐச்வர்யம் வீர்யம் சக்தி தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்கள் கூடி தயாக்ஷாந்தி ஔதார்யாதிகளான அபரிமித கல்யாண குணங்களை ப்ரஸவித்தனவென்றபடி. இத் திருக்குணங்களெல்லாம் பரமபதநாதனிடத்திலு மிருக்கச்செய்தேயும் பரமஸாம்யாபந்நர்களான நித்யமுக்தர்களுள்ள அவ்விடத்திலே பரத்வகுண மொன்றொழிய மற்ற குணங்கள் பிரகாசிக்க வழியில்லாமையாலே அத் திருக்குணங்களையெல்லாம் பிரகாசிப்பிக்கவேண்டியே பயணமெடுத்து வருகிறான் பரமன் இந் நிலவுலகுக்கு. இதனை பட்டர் *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற ஸ்ரீஸூக்தியினால் விளங்கவைத்தார். *பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா* என்றான் பவபூதி மஹாகவி. ஜலாசயங்களில் நீர் மிகமிக நிரம்பிவிட்டால் அதற்குப்போக்குவீடுவிட்டு ஜலாசயத்தைத்தரிக்கச்செய்வது வழக்கம். அங்ஙனே நீர் வெளிப்படுவதற்குப் பரீவாஹமென்று பெயர். அதுபோல, பரமபதநாதனுடைய திருக்குணங்கள் அங்கு விலைசெல்லமாட்டாமையாலே பரீவாஹாபேக்ஷை பிறந்து பரன் இந்நிலவுலகில் அவதரிக்கலாகிறது; அந்தத்திருக்குணங்களெல்லாம்

இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இங்கேயாம். விபவாவதாரங்களையும் அர்ச்சாவதாரங்களையும் நோக்கி இங்கே என்கிறது. முந்துறமுன்னம் விபவாவதாரங்களைக் கொள்வோம். மத்ஸ்யகூர்மாதிகளான விபவாவதாரங்களுள் ஸ்ரீராமாவதாரத்திலும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்திலுமே திருக்குணங்களைக் கொள்ளை கொள்ளையாக அநுபவிக்க ப்ராப்தமாகிறது. முராரி மஹாகவி அநர்க்கராகவ நாடகத்தில் கூறுகின்றார்—“[illegible] ॥ [யதி க்ஷுண்ணம் பூர்வைரிதி ஜஹதி ராமஸ்ய சரிதம் குணைரேதாவத்பிர் ஜகதி புநரந்யோ ஜயதி க: ? ஸ்வமாத்மாநம் ...கதமுபகரிஷ்யந்தி கவய: ?] இதன் கருத்தாவது-முற்காலத்தில் காவ்யநாடக சம்பூப்ரபந்தங்கள் இயற்றும் கவிகளெல்லாரும் ஸ்ரீராம சரித்திரத்தைப் பற்றியே எழுதிக்கொண்டிருந்தபடியால் நாம் அப்பெருமானைவிட்டு வேறொரு பெருமானுடைய சரித்திரத்தைத் தொடுக்கலாமென்று பார்த்தால், இவ்வளவு திருக்கல்யாண குணங்களோடுகூடிய வேறொரு பகவத் வ்யக்தி யில்லையே! அது கிடக்க; கவிதாசாதுர்யம் பெற்ற கவிகள் தங்களுடைய வாக்வைபவத்தை ஸார்த்தகமாக்கிக் கொள்ளவேணுமானால் இராமபிரானைத் தவிர்த்து வேறு எந்த வ்யக்தியைக் கொள்ளமுடியும்? என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ப்ரஸந்நராகவகர்த்தா இக்கருத்தைச் சிறிது மேம்படுத்திக் கூறுகின்றார். [“ஸ்வஸூக்தீநாம் பாத்ரம் ரகுதிலகம் ஏகம் கலயதாம் கவீநாம் கோ தோஷ: ஸ து குணகணாநாம் அவகுண:, யதேதைர் நிச்சேஷை: அபரகுணலுப்தைரிவ ஜகதி அஸாவேகச் சக்ரே ஸததஸுகஸம்வாஸ வஸதி:] இந்த ச்லோகத்தின் கருத்தாவது:-(இதில் ‘சக்ரே’ ([illegible]) என்கிறக்ரியைகர்த்தரிரூபம்அன்று, கர்மணிரூபம்-செய்யப்பட்டானென்கை). கவிகளாய்ப் பிறந்தவர்களெல்லாரும் தங்கள் தங்கள் ஸூக்திகளுக்கு ஸ்ரீராகவனொருவனையே பாத்திரமாகக் கொள்வதானது கவிகளுடைய தோஷமன்று. ராகவனுடைய திருக்குணங்களின் தோஷமாகும். ஸகல குணங்களும் ஒன்றுசேர்ந்து தாங்கள் நல்லதோர் ஆச்ரயம்பெற்று அதனால் மேன்மைபெறவேணுமென்று ஆசைப்பட்டு ஸ்ரீ ராகவனிடத்திலே வந்து சேர்ந்து இனிது வாழ்கிறபடியால் ஸ்ரீராகவனொருவனே கவிதாபாத்ரமாகிறானென்றபடி. ஸ்ரீ ராமாயணத்தில் எந்தவிடத்தில் கயிறுபோட்டுப் பார்த்தாலும் இராமபிரானுடைய திருக்குணங்களே மிகமிகக் காணலாகும். ஆரம்பத்திலுள்ள வால்மீகி நாரத ஸம்வாதம் குணப்ரசுரம். பிறகு அயோத்யாவாஸி ஜனங்கள் முகமாகவும் சூர்ப்பணகை, தாரை, மந்தோதரி முதலானார் முகமாகவும் வால்மீகி பகவான் வெளியிட்டுள்ள திருக்குணங்கள் அபரிமிதம். வையவந்த வாயாலே வாழ்த்துகிறபடி.

பெருமாள் இராவணனோடு போர் புரியும்போது “இன்று போய் நாளைவா” என்றதில் ஈடுபட்ட கூரத்தாழ்வான், (அதிமாநுஷ ஸ்தவத்தில்) “கோயம் குண: கதரகோடி கத: கியாந்வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத! கஸ்ய பூமி:” என்று வியக்கிறார். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் “பரார்த்தி: பரமஸ்பஷ்ட:” என்பது முதலான பதினாறு திருநாமங்கள் இராமபிரானுடைய திருக்குணங்களைச் சொல்லுகின்றனவென்று வியாக்யானிக்கத்தொடங்குகையில் ‘இத உபரி ம்ருதஸஞ்ஜீவனம்

ராம வ்ருத்தாந்த: ப்ரஸ்தூயதே' என்று அவதாரிகை இட்டருளுகிறார். பல சொல்லி என! திருவடி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் வெறுத்து ராம குணாநுபவத்திற கென்றே சிரஞ்ஜீவி பட்டம் பெற்று இவ் விபூதியிலேயே விளங்கிவருகிறார்.

திருவாய்மொழியில் (2-7-4) "தேவுந்தன்னையும் பாடியாடத் திருத்தி" என்றவிடத்து ஈட்டில் "தேவு மென்கிறது ஐச்வர்யத்தை. தன்னை என்கிறது ஆச்ரித பாரதந்த்ர்யத்தை. அதிறே தானான தன்மை. 'ஆத்மாநம் நாதிவர்த்தேதா:' என்றானிறே. ஆத்மபூதம் பரதம் நாதிவர்த்தேதா:' என்கிறானென்று சிலர் சொல்லுவர்கள்" என்றருளிச் செய்து அதைமறுத்து பட்டர் நிர்வஹித்ததை அற்புதமாக எடுத்துக்காட்டுகிறார் நம்பிள்ளை. சித்ரகூடத்தில் பரதாழ்வானுடைய ப்ரார்த்தனையைத் தலைக்கட்டி வைக்க வேணுமென்று கூறுகின்ற வஸிஷ்ட பகவான் 'ஆத்மாநம் நாதிவர்த்தேதா:' என்று கூறுவதானது ஆச்ரித பாரதந்த்ர்யமாகிற ஸ்வஸ்வபாவத்தை இழக்கலாகாது என்று சொல்லுவதாகப் பொருள் செய்தருளி, 'தேவுந்தன்னையும்' என்ற திருவாய்மொழிப் பாசுரத்தோடு ஸமந்வயம் செய்திருப்பதானது நம் பூர்வாசாரியர்களுக்கன்றி மற்றெவர்க்கும் நிலமன்று. ஸஹஸ்ரநாமத்தில் "விஜிதாத்மா விதேயாத்மா" என்றவிடத்தில் ஆதி சங்கராசாரியர் அவிதேயாத்மா என்று பதம் பிரித்து ரஸபங்கமாக வியாக்கியானம் செய்திருப்பதைத் தள்ளி 'விதேயாத்மா' என்றே பதம் பிரித்து பட்டர் செய்தருளியிருக்கிற வியாக்கியானம் இனிமையே வடிவெடுத்தது. அவருடைய திருத்தகப்பனாரான ஆழ்வான் 'அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணத பரதந்த்ரம் மநுமஹே" என்கிற ச்லோகரத்னத்தினால் எம்பெருமானுக்கு ஆச்ரித பாரதந்த்ர்யமே வடிவு என்பதை நிலைநாட்டியருளினர். பகவத்கீதையின் உள்ளே இறங்கினால் *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ:* இத்யாதி ச்லோகங்களினால் அவனுடைய பரத்வம் வெளிவரக் கூடும். கீதையின் ஆரம்பத்தை நோக்கினால் அவனது இயற்கையான ஆச்ரித பாரதந்த்ர்யமே வெளியாகும். கீதையின் ஆரம்பம் என்ன? "ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்த்தாபய மேச்யுத" என்று கூசாமல் சொல்லுகிறான் அர்ஜுநன். கண்ணபிரான் "என்னை நியமிக்க நீ யார்?" என்றுகேளாதே அப்படியே ஆஜ்ஞாபரிபாலனம் செய்திருக்கிறான்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் இரண்டு திருமொழிகளினால் அற்புதமான அநுபவம் காட்டுகிறார். பரத்வத்தை முன்னே அநுபவித்து ஸௌலப்யத்தைப் பின்னே காட்டுவது ஒரு பதிகம். ஸௌலப்யத்தை முன்னே காட்டிப் பரத்துவத்தைப் பின்னே காட்டுவது மற்றொரு பதிகம். (10-6) *எங்கானுமீதொப்பதோர் மாய முண்டே* என்கிற பதிகத்தில் பாசுரந்தோறும் மூன்றேகால் அடிகளால் அவனுடைய பரத்வத்தைப் பேசி "அவன் காண்மினின்றாய்ச்சியரால் அளை வெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே" என்று ஸௌலப்யத்தைப் பேசித் தலைக்கட்டுகிறார். அந்தப் பெரிய திருமொழி தன்னிலேயே (11-5) *மானமருமென்னோக்கிப் பதிகத்தில் ஒருத்தி முன்னடிகளால் ஸௌலப்யத்தையும் மற்றொருத்தி பின்னடிகளால் பரத்வத்தையும் பேசுவதாக வைத்து உபய குணங்களையும் அற்புதமாக அநுபவித்திருப்பது காண்க. இவையன்றோ அநுபவ ரஸிகர்களின் படிகள்

எம்பெருமானர் சரணாகதி கத்யத்தில் திருவாபரண சூர்ணையில் "கிரீடமகுட சூடாவதம்ஸ" என்று திருமுடிக்கான திருவாபரணத்தை மூன்றுபடியாகப்பேசி யுள்ளார். கிரீட மென்றாலும் மகுடமென்றாலும் சூடாவதம்ஸ மென்றாலும் ஒன்று கவே கொள்ளலாம். அதை மூன்றாக்கியருளிச் செய்ததன் கருத்து யாதெனில்; நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "பாரளந்த பேரரசே எம் விசும்பரசே எம்மை நீத்து வஞ்சித்தோரரசேயருளாய்" என்று மூன்று விஷயங்களுக்கு மகுடாபிஷேகம் செய்து 'அரசே! அரசே!! அரசே!!! என்று விளிக்கிறார். 'தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட' என்றபடி வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்துப் பாரளந்ததனால் ஸௌலப்யத்தைக் காட்டி யருளினன். விசும்பரசே என்பதனால் பரத்வம் காட்டினபடியை விவரிக்க வேண்டுமோ! 'எம்மை நீத்து வஞ்சித்தோரரசே' என்பதனால் ப்ரணயித்வகுணம் காட்டப்பட்டதாக ஆசாரியர்களின் வ்யாக்யானம்.

— என்னுடைய நூற்றுக்கணக்கான அநுபவங்களில் சில கேளீர்! —

1. தாயெடுத்த சிறு கோலுக்கு உளைந்தோடுங் கண்ணன் ததிபாண்டனைச் சரணமடைந்து தயிர்த்தாழியிலே மூச்சுத்திணறிக்கிடந்தது ஒருபுறம்=உனக்கும் உன் தயிர்த்தாழிக்கும் உன்னைச் சார்ந்த இருபது மனைக்காரர்களுக்கும் மோக்ஷ மளித்தேனென்பது ஒருபுறம்.

2. அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்றி மழைவந்தெழுநாள் பெய்வித்துக் கொடியேறு செந்தாமரைக் கை விரல்கள் கோலமுமழியாதே வாடாதே வடிவேறு திருவுகிர் நோவாமே குன்ற மொன்றெடுத்தேந்திநிற்பது ஒருபுறம்—*தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா? என்று வினவினரைச் சீறி * அஹம் வோ பாந்தவோ ஜாத: * என்றது மற்றொருபுறம்.

3. ரதியாயிருக்கவேண்டிய தான் தேரோட்டி யென்னும் ஸாரதியாய் நின்று குருக்ஷேத்ரத்திற்குத் தேரோட்டிக்கொண்டு செல்லுகிறான்; வழியிடையே பாலை நிலம் குறுக்கிட்டது; குதிரைகள் விடாய்த்தன; ரதிகளாயிருக்கின்ற பாண்டவர்க ளும்விடாய்த்துக்கத்துகின்றனர். அப்போதுஎன்ன நடந்தது? பெரியாழ்வார்ஸாதிக் கிறார் (பெரியாழ்வார் திருமொழி (4-2-7) *மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொரு தேரின்மேல், முன்னங்குநின்று மோழை யெழுவித்தவன் மலை* — இந்த சரித்திரம் பெரியாழ்வாரொருவரே பணித்தது. குருக்ஷேத்திரத்தில் அது .... .... .... .... .... இற்றைக்கும் காட்டப்படுமிடம். இப்படியாகப் பரத்வமும் ஸௌலப்யமும் கலந்து பரிமாறும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் எதை விடுவது? எதை யநுப விப்பது?

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (5-10.) *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்று க்ருஷ்ணாவதார சரிதைகளை யநுபவிக்கத் தொடங்கினர். முதற் பாட்டு கேட்டவுடனே எம்பெருமான் ஓடிவந்து 'ஆழ்வீர்! என் சரிதைகளில் உமக்கு எது மிகவினிது?' என்று வினவ, *அது விது வுது என்னலாவனவல்ல என்னை உன்,

செய்கை நைவிக்கும்* என்றாராழ்வார். இதையே கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புதம் அதிப்ரியங்கரம்* என்று மொழிபெயர்த்தாப்போலருளிச் செய்தனர். ஆழ்வார் பாசுரத்தில் *உன்செய்கை* என்றது உயிர். ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தியில் (தாவகம்) என்றது ஜீவநாடி.

நிகமனம்:—என்னுடைய பரமாப்தர்களான கரியமாணிக்கம் ஸ்ரீமான் R. ராதாக்ருஷ்ணன் முதலானோருடைய நிர்ப்பந்தமான ஆஹ்வானத்தைப் பலகால் பெற்றிருந்த நான் ஆமூருக்கு நேரில் வந்து இவ் விஷயங்களைப் பரக்க உபந்யஸிக்க மநோரதித்திருந்தும் உடல் நிலை இடந்தாராமையாலே என்னுடைய வாசிக கிஞ்சித்காரத்தைஇப் பத்ரிகை மூலமாகத் தலைக்கட்டிக்கொண்டபடி. *

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம். **அண்ணங்கராசாரியர்.**

(குறிப்பு) ஸ்ரீ ஸ்வாமி 22–1–75 பின்மாலை சயனத்திலிருந்தபடியே ஸாதித்துவர அதை யடியேன் அப்படியே எழுதி யச்சிடுவித்து ப்ரசுரிக்கலானேன். நேர்ந்துள்ள பிழைகளைப் பொறுத்தருள்வது. தி. அ. அனந்தாழ்வான்.
*25—1—75.*

---

# ரதஸப்தமியும் - ஒரு விநோதமும்

18—2—75 செவ்வாய்க்கிழமை யன்று ரதஸப்தமி மஹோத்ஸவம். அன்று காலையிலும் மாலையிலும் தேவப்பெருமாளுக்கு இவ்விடத்தில் நான்கு மாடவீதிகளிலும் மிகப் பெரிய உத்ஸவம் நடைபெறுவது நடைபெற்றது. சில நாட்களாய் உத்ஸவாதிகளையநுபவிக்க ப்ராப்தி யற்ற அடியேன் கிருஹத்தினுள்ளிருந்தபடியே ஸேவித்திருந்தேன். அதிக பரிசயமில்லாத ஒரு ஸ்வாமி (காலை 8-மணிக்கு) உள்ளே வந்து "திருமேனி பாங்கில்லை யென்று கேள்விப்பட்டேன்; அடியேன் பள்ளிகொண்டை ஸமீபத்தில் ஸ்கூல் டீச்சராகப் பணிசெய்யும் தமிழ் வித்வான்; ரதஸப்தமியைப்பற்றி ஒரு கட்டுரை யெழுத அவசியம் ஏற்பட்டிருக்கிறது. திவ்வியப் பிரபந்தங்களில் தேரைப் பற்றி வரும் பாசுரங்கள் ஏழு ஸாதித்தருளவேணும்" என்றார். "ஏழு என்ன? எழுபதும் எழுநூறும் சொல்லுகிறேன்" என்றேன். "வேண்டாம் வேண்டாம்; ரதஸப்தமியைப்பற்றி எழுத உத்தேசமாகையால் ஏழே போதும்" என்றார். அவர் கையில் காகிதமும் பேனாவும் வைத்துக் கொண்டிருந்தார்; "சொல்லி வருகிறேன், எழுதிக் கொள்ளும்" என்றேன். 'இன்ன அழ்வார், இன்ன இடத்தில் என்பதையும் ஸாதிக்கவேணும்' என்றார். அப்படியே சொல்லி வந்தேன். அது வருமாறு.

1. * தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத் தனியொரு தேர்கடவித் தாயொடு கூட்டிய. * [பெரியாழ்வார் திருமொழி [1—5—7]

2. * உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக் கொண்டு.* (பெரியாழ்வார் திருமொழி 3 –9—3.)

3. * மாதலி தேர் முன்புகோல் கொள்ளமாயனிராவணன்மேல். * [நாச்சியார் திருமொழி (5—3.)

4. * களிறுழிந்து தேரொழிந்துபாவொழிந்துவனமே மேவி * [பெருமாள் திருமொழி 9 2 ]

5. * தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன்றறியேனே. * [பெரிய திருமொழி 8—5—2 ]

6. * உலக்கத்தேர்கொடு சென்றமாயமு முட்பட மற்றும் பல. * [திருவாய்மொழி 6—4—9.]

7. * மாயனன்று ஐவர் தெய்வத் தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள்தெரியப்பாரினில்சொன்ன விராமானுசன் * [இராமாநுசநூற்றந்தாதி-68] இவை கேட்க வந்தவர் தமது கையில் நாலாயிர திவ்யப்ரபந்த புத்தகமும் கொண்டுவந்திருந்தார். அநாயாஸமாக அதில் குறிப்பெடுத்துக்கொண்டு 'ஸந்தோஷம்! பரம ஸந்தோஷம்!!' என்று சொல்லிச் சென்றார்.

'ரதஸப்தமியைப்பற்றி இப் பாசுரங்கள் கொண்டு எவ்விதமான கட்டுரையெழுதப் போகிறீர் ?' என்று கேட்டேன்; 'மறுபடியும் விரைவில் விடை கொண்டு விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லிச் சென்றுவிட்டார்.

---

## ஸ்ரீ காஞ்சி ஜீயர் ஸ்வாமியின் பரமபத ப்ராப்தி

கோயில், திருமலை, திருநாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களிற்போல பெருமாள் கோயில் என்கிற காஞ்சீபுரத்திலும திவ்யதேச பரிபாலனத்தற்காக ஒரு ஜீயர் ஸ்வாமி நெடு நாளாகவே எழுந்தருளியிருப்பதுண்டு. அவருடைய திருநாமம் (வாதிகேஸரி) அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி என்பது. அந்த ஜீயர் ஸ்வாமியினால் தேவப்பெருமாள் தேவஸ்தானத்திற்கு அனேக கைங்கரியங்கள் நடைபெற்றிருக்கின்றன. இவர் தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தின் தர்ம கர்த்தாவாக (1553) இருந்திருக்கிறார். திருப்பாணாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் ஸன்னிதிகளுக்கும் கைங்கரியங்கள் செய்திருக்கிறார். இம்மடத்து சிஷ்யரான கந்தாடை ஸ்ரீராமாநுஜ ஐயங்காரும் இந்த தேவஸ்தானத்திற்குப் பற்பல அரிய திருப்பணிகள் செய்துள்ளார். (ஸ்ரீராமானுஜன் 314 காண்க.) மூல புருஷர் சிறந்த வித்வானாகவும் எழுந்தருளி யிருந்தார் அனேக க்ரந்தங்கள் அருளிச் செய்தவர். "ஸ்ரீ பாஷ்ய த்ரமிடாகமாத்யதசக த்வந்த்வைக கண்ட்யம்'' என்கிற க்ரந்தம் மிக உயர்ந்த க்ரந்தம். ப்ராசீன பகவத் விஷய ஸ்ரீ கோசங்களில் தெலுங்கு லிபியிலும் மணிப்ரவாள லிபியிலும் அச்சிடப் பட்டுமிருக்கிறது. அந்த ஜீயர் ஸ்வாமியின் மடம் கீழகோபுர வாசலில் உள்ளது. கோயில் திருமலைகளிற் போல இந்த ஜீயர் ஸ்வாமிக்கும் தேவப்பெருமாளுடைய தேவஸ்தானத்தில் கைங்கர்ய விசேஷங்களும் தத்ப்ரயுக்தமான மர்யாதா விசேஷங்களும் ஏற்பட்டிருந்தன. தற்காலத்தில் கலா வைஷம்

வத்தினல் ஏதோ மாறுபாடடைந்திருக்கிறது. அதுபற்றி இப்போது விசாரமில்லை. ஆண்டு தோறும் தைமீ ஸங்கராந்தியன்று சீவரம் பரிவேட்டையென்று உத்ஸவம் நடந்து வருகின்றதே, அதுசீவரமன்று, ஜீயர்புரம். அந்த மண்டபமும் அந்த வுத்ஸவமும் இந்த ஜீயர் ஸ்வாமியினல் ஏற்படுத்தப் பட்டதென்று பெரியோர்கள் பரம்பரையாகக் கூறுவர்கள். ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நர்களான பல ஜீயர் ஸ்வாமிகள் இவ்வாஸ்தானத்தை அலங்கரித்தருளி யிருக்கிறர்கள். அடியேனுக்குப் பூர்வாச்ரம மாதாமஹரான ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி (அதாவது சதுஷ்ஷஷ்டி கலாவல்லப ஜீயர்ஸ்வாமி) முதலாக ஐந்து திருநாமங்கள் இந்த மடாதிபதிகளாக எழுந்தருளி யிருந்ததை அடியேனறிவேன். கடைசியாக கர்நாடக ப்ராநதம் மண்டயாவில் ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நராக எழுந்தருளி யிருந்த ஸ்ரீமதுபயவே. முடும்பை ராமாநுஜாசாரியரைப் பிரார்த்திக்க அவர் ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரகாலம் ஆஸ்ந்தானத்தை அலங்கரித்திருந்து சென்ற கார்த்திகை மாதத்தில் திருநாராயணபுர ப்ராந்தத்திற் கெழுந்தருளி திருமேனி அபாடவத்தினல் 28—1—75ல் அங்கேயே திருநாடலங்கரிக்கலாயிற்று.

---

# மாசிப்புனர்பூசத்தின் அநுபவம்

## குலசேகராழ்வார்க்கு என்ன தெரியும்?

சென்ற வருஷம் பங்குனி விசாக நிகழ்ச்சியில் ஒரு நாள் குலசேகராழ்வாரைப் பற்றி அடியேன் உபந்யஸிக்க நேர்ந்தபோது குலசேகராழ்வார்க்கு என்ன தெரியும் என்று விஞவாக ஒரு மகுடம் வைத்து 'அவருக்கு அழத் தெரியும்' என்று விடை யிறுத்து சிறியதோருபந்யாஸம் செய்தேன். அதைச் சிறிது விவரிக்கிறேன்.

அழுகை என்பது இரண்டு விதம். தாமாக அழுவது ஒரு விதம். பிறருடைய அழுகையை அநுகரித்துத்தாம் அழுவது மற்ருெரு விதம். இவ்விரண்டு விதமான அழுகையும் குலசேகராழ்வாரிடத்து விசேஷமாகக் காணப்படுகிறது. இவருடைய பெருமாள் திருமொழி பத்துப் பதிகங்கள் கொண்டது. அதில் முதற்பதிகமான *இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி என்கிற தசகத்தில் "திருப்புகழ்கள் பலவும் பாடி ஆராதமனக்களிப்போடழுத கண்ணீர் மழைசோர நினைந்துருகி யேத்தி" (9) என்பது முதலான பாசுரங்களில் தாமாக அழுதமை விளங்கும்.

* ஆலைநீள் கரும்பென்கிற ஏழாவது பதிகத்திலும் * வன்தாளினிணை வணங்கி என்கிற ஒன்பதாவது பதிகத்திலும் பிறருடைய அழுகையைத் தாம் அநுகரித்து அழுதமை விளங்கும். *ஆலைநீள் கரும்பு பதிகத்தின் நிகமனப்பாசுரத்தில் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல் குலசேகரன் சொன்னது என்றும் * வன்தாளினிணைப் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் *ஏரார்ந்த கருநெடுமாலிராமனய் வனம் புக்க வதனுக்காற்ருத் தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன் தான் புலம்பிய அப்புலம்பல் தன்னை ....... குலசேகரன் சொற் செய்த தென்றும் புலம்பல்களின்

ப்ரமேயத்தைத் தாமே வெளியிட்டருளினர். தேவகியின் புலம்பல் ஸ்ரீ விஷ்ணு புராணுதிகளிலும் தயரதமன்னவன் புலம்பல் ஸ்ரீராமாயணத்திலும் உள்ளதாயினும் அவற்றைப் பாராயணம் பண்ணும்போது நமக்கு எவ்விதமான மனோவிகாரமும் ஏற்படுவதில்லை. மேலே எடுத்துக்காட்டிய குலசேகரப்பெருமாளுடைய திருமொழி களை ஸேவிக்குங்காலங்களில் கல்நெஞ்சும் கரைகின்றது. முந்தின பதிகத்தின் ப்ரமேயத்தைச் சிறிது விவரிக்கிறேன். "மக்களறுவரைக் கல்லிடை மோத இழந் தவள் தன் வயிற்றில் சிக்கென வந்து பிறந்து நின்ருய்" (பெரியாழ்வார் திருமொழி 5-3-1ல்) என்கிற படியே அஷ்டம கர்ப்பம் கண்ணபிரானைத் திருவவதரித்தபோது "ஜாதோஸி தேவ தேவேச சங்கசக்ர கதாதர உபஸம்ஹர விச்வாத்மந் ரூபம் ஏதத் சதுர்புஜம்" இத்யாதிகளைச் சொன்னவர்கள் வஸுதேவ தேவகீதம்பதிகள். இதனல், சங்க சக்ர கதாதரனயவதரித்தவன் பரமபுருஷனே யன்றி ஸாமாந்ய மனிதனல்லன் என்பதையவர்கள் தெரிந்து கொண்டவர்கள் என்பது நிஸ்ஸந் தேஹமாகத் தேறும். ஆகவே அவனை "உபஸம்ஹர விச்வாத்மந் ரூபமேதத் சதுர்புஜம்" என்று சொல்லி ப்ரார்த்திக்கவும் "வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநு மாத்ரோதகோ யயௌ" என்னும்படி யமுனையைக் கடந்து திருவாய்ப்பாடி யிலே கண்ணனைக் கொண்டு சேர்க்கவும் ஆவச்யகதையில்லை. ஆயினும் தாங்களே கொண்டுவிட்டுப் பிறகு புலம்புவது ஆச்சர்யமான தொரு ஸம்பவம். அதனைக் குலசேகராழ்வார் தேவகீ வேஷம் பூண்டு பேசித் தாம் புலம்புவது மிக ஆச்சர்யம். இப்பதிகத்தில் வெளிவருகின்ற விஷயங்கள் தேவகீ வஸுதேவர்களின் இழவு ஒன்று, நந்தகோப யசோதைகளின் அற்புதமான பெருப்பேறு மற்ருென்று. இவையிரண்டும் இப்பதிகத்தில் தலை சிறந்து விளங்குவன.

பிந்தின தயரதன் புலம்பலின் காரணம் உலகப்பிரசித்தம். பிள்ளை லோகா சாரியர் முமுக்ஷுப்படியில் "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு" என் றருளிச் செய்தபடி ஸித்த தர்மமான எம்பெருமானை விட்டு ஆபாஸ தர்மத்தில் ஆசை வைத்த மன்னவன் அழுவதானது தன்னுடைய தவறுதன்னைத் தான் உணராமையினலாகும். கைகேயி எவ்வளவு நிர்ப்பந்தமாகக் கோரினலும், "அம்மா! உனக்கு நான் கொடுத்த வரம் என்றைக்கோ; அதுவும் இன்னதென்று குறிப்பிடப்படவில்லை. ஸ்ரீராமபிரானை நேற்று மாலை நான் வரவழைத்து ஒரு முறைக்கு இரு முறையாக உனக்கு அரசு கொடுத்தேனென்று சொல்லியிருக் கிறேனுகையால் இவ் வார்த்தையை நான் தவறமாட்டேன்" என்று பிடிவாத மாகச் சொல்லலாமா யிருக்க அப்படி சொல்லாமல் பெருமாளநுபவத்தை இழந்ததானது ஆபாஸ தர்மத்தில் ருசியினலாகுமத்தனை.

இவ் விஷயங்களைச் சென்ற வருஷம் அடியேனுடைய க்ருஹத்தில் உபந்ய ஸித்தபோது திருவெவ்வுளூரிலிருந்து எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே பழவேரி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, "குலசேகராழ்வார்க்கு என்ன தெரியும்! என்கிற வினவும் 'அவருக்கு அழத்தான் தெரியும்." என்கிற விடையும் அதன் விவரணமும் வல்வினையேனை ஈர்கின்றது." என்று மிகவும் ஈடுபட்டுப் பேசினர்.



1. சென்னை ஸத்காலக்ஷேப ஸபையின் ஆதரவில் ஸ்ரீமதுபயவே ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் நிகழ்த்திய (45வது) திருப்பாவை சாற்றுமுறையன்று (13-1-75) சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் உயர்திரு. A. அழகிரிசாமியவர்களும் சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் உயர்திரு V. சேதுராமையர் அவர்களும் ஸ்ரீஸ்வாமியுடன் அமர்ந்திருக்கும் காட்சி.



2. ஸத்காலக்ஷேப ஸபையின் உறுப்பினர்களுடனும் அன்பர்களுடனும் ஸ்ரீ ஸ்வாமி வீற்றிருக்கும் காட்சி.

# அக்நிஹோத்ரியார் ஆழ்ந்து கவனிப்பது.

(ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் தக்ஷிணபாஹுவான
M. A. வெங்கடகிருஷ்ணமாசாரியர் எழுதுவது.)

25—2—75 தேதியன்று ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியை ஸேவிக்க அடியேன் ஸ்வாமி ஸன்னிதிக்கு விடைகொண்டேன். அதே ஸமயத்தில் தபாலில் வந்த ஒரு பத்ரிகையைக்கண்டேன். அதாவது காஞ்சி ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதியின் பொன்மொழிகளைக் காண்மின்! கேண்மின்! தெளிமின் "இரண்டாவது வெற்றி" என்ற தலைப்புடைய ஒரு Pamphlet. அது சின்ன இரண்டரைபேஜ்தான் உள்ளது. முடிவில் கு. ராமாநுஜன் என்கிற கையெழுத்தைக் கண்டதனாலும் எழுதப்பட்டுள்ள விஷயத்தின் போக்கைக் கண்டதனாலும் குடந்தை (அக்நிஹோத்ரம்) ராமாநுஜாசாரியர் எழுதி வெளியிட்டதாக இருக்கவேணுமென்று கருதலாயிற்று. சில மாதங்களாக ஸ்ரீராமாநுஜனில் ஸ்ரீ ஸ்வாமி எழுதி வெளியிடுவரும் திவ்ய ப்ரபந்த மஹாநிதி என்கிற யதார்த்த மஹாநிதி க்ரந்தத்தில் உகர வரிசையில் (பக்கம் 89) உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர் என்கிற தலைப்பின் கீழ் அருமையான சில விஷயங்களை ஸ்ரீ ஸ்வாமி எழுதியிருந்தார். அவற்றை இங்கே யெல்லாருங்காண உதாஹரிக்கிறேன்

*உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்*. எம்பெருமானார் தரிசனத்தைச் சேர்ந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு 'உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்' என்கிற விருது அஸாதாரணமாயிருக்கும். இந்த விருது ஸ்ரீமந்நாதமுனிகள் (அல்லது) ஆளவந்தார் (அல்லது) எம்பெருமானார் காலத்திலிருந்து வழங்குவதாகும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவருக்கொருவர் கடிதமெழுதும்போது இந்த விருதை யிட்டேயாகவேணுமென்பர் பெரியோர். அப்படியே நிகழ்ந்துவருகின்றதெங்கும். இதைப் பூர்த்தியாக எழுத இயலாதபோது (ஸ்ரீஉவே) என்றோ (*ஸ்ரீமதுபயவே*) என்றோ எழுதியே வருகிறார்கள். இங்குச் சிலர் வாதிப்ப தொன்றுண்டு; உபய வேதாந்தமும் அதிகரிக்கவேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? வடமொழி வேதாந்தத்தில் அதிகாரிகளாகக்கூடியவர்கள் அதை அதிகரித்து அதற்கு ப்ரவர்த்தகர்களாகட்டும்; அதற்கு அதிகாரிகளாகப்பெருதவர்கள் த்ராவிட வேதாந்தத்தையதிகரித்து இதற்கு ப்ரவர்த்தகர்களாகட்டும். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திலுள்ள அர்த்தங்கள் தானே த்ராவிட வேதாந்தத்திலுள்ளது. பாஷாபேதமே யொழிய அர்த்த பேதமில்லையே. ஆகவே ஏதேனுமொரு வேதாந்தத்தைமட்டும் அதிகரித்தால் போதுமல்லவா? என்று. இப்படி வாதிப்பவர்கள் பலருண்டு; வாதிப்பவர்களில்லையெனினும் ஸந்தேஹிப்பவர்களுள்ளார்களென்று கொண்மின். இதற்குச் சொல்லுகிறோம். இந்த உபயவேதாந்தத்தை ஸாகாங்க்ஷவேதாந்தம், நிராகாங்க்ஷ வேதாந்தம் என்கிற பெயர்களை யிட்டும் வ்யபதேசிக்கலாம். ஸம்ஸ்க்ருத வேதாந்தம்—ஸாகாங்க்ஷ வேதாந்தம். த்ராவிட வேதாந்தம் நிராகாங்க்ஷ வேதாந்தம். (இதனை விவரிக்கிறோம்.) ஸம்ஸ்க்ருத வேதாந்தமாவது-சாரீரக மீமாம்ஸை என்கிற ப்ரஹ்மஸூத்ரமும் அதன் பாஷ்யமுமாகும். த்ராவிட வேதாந்தமாவது — திவ்யப்ரபந்த — தத்வ்யாக்யான ரஹஸ்யங்களாகும். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் காணககிடைக்காத அர்த்தங்கள் பலவுண்டு; (எவையென்னில்;)

சாரீரகமீமாம்ஸையானது பகவானை ஆதியோடந்தமாக ப்ரஹ்மம்—பரப்ரஹ்மம் என்றதேயல்லது ஓரிடத்திலும் நாராயண வாஸுதேவ விஷ்ணு சப்தங்களையிட்டுச் சொல்லிற்றில்லை. அவனை லக்ஷ்மீபதியாகவும் சொல்லிற்றில்லை; அவன் ராம க்ருஷ்ணாத்யவதாரங்கள் செய்தருளுகிறானென்றும் சொல்லிற்றில்லை; அவன் க்ஷமா தயா வாத்ஸல்யாதி கல்யாண குணங்களை யுடையவனென்றும் விவரித்துச் சொல்லிற்றில்லை. கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் சொல்லிற்றில்லை. ப்ரபத்தியோ ஆசார்யாபிமானமோதான் தஞ்சமென்றும் சொல்லிற்றில்லை. [இன்னமும் விவரித்துக்கூற வேண்டா] இவையெல்லாம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு இன்றிமையாத அர்த்த விசேஷங்களேயன்றோ. இவற்றைப் பெரும்பாலும் எம்பெருமானார் கத்யத்ரய மென்னும் க்ரந்தத்திலே ஸுஸ்பஷ்டமாக அருளிச் செய்துள்ளார். எது கொண்டு அருளிச் செய்தார் தெரியுமோ? அருளிச் செயல் கொண்டே (அதாவது—த்ராவிடவேதாந்தங் கொண்டே) யருளிச் செய்தார் என்னத் தட்டில்லை. இதை மேலே எகரவரிசையில் எம்பெருமானார் என்னுந் திருநாமத்தின் விவரணத்திலே மிக விளக்குவோம். ஸம்ஸ்க்ருத வேதாந்தம் ஸாகாங்க்ஷவேதாந்தம் (அல்லது ஸாபேக்ஷ வேதாந்தம்) என்றும், த்ராவிட வேதாந்தமானது — நிரபேக்ஷ வேதாந்தமென்றும் நிர்தேசிக்கத்தக்கதாயிற்று. அப்படியானால் நிரபேக்ஷமான த்ராவிட வேதாந்தமொன்றே போதுமே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு—என்கிற வாதம் தோன்றும். *உளன்சுடர்மிகு சுருதியுள்* என்று ப்ரதமாசார்யரும், *ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி....செய்யமறை தன்னுடனே சேர்ந்து* என்று சரமாசார்யரும் அருளிச் செய்திருக்கையாலே ஸம்ஸ்க்ருத வேத வேதாந்தங்கள் விடத்தக்கவையல்ல. ஆசார்ய ஹ்ருதயத்தில் கீதைக்கு ஏற்றம் சொல்லும்போது "பகவன் ஞானவிதி பணிவகையென்று இவ ரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்" என்றருளிச் செய்த கணக்கிலே "சுடர் மிகு சுருதியென்று இவரங்கீகாரத்தாலே வடமொழி மறை முடிக்கு உத்கர்ஷம்" என்று பணிக்கத்தகும்.

இதன் ப்ரமேயம் என்னவென்றால் ஸ்ரீ பாஷ்யாதி ஸம்ஸ்க்ருத வேதாந்த க்ரந்தங்களில் பரிசயம் செய்பவர்கள் த்ராவிட வேதாந்தமான பகவத் விஷயாதிகளிலும் பரிசயம் செய்தேயாகவேணும் என்பதை உபபத்திகளுடன் விவரிப்பதேயாகும். இதை உள்ளபடி க்ரஹிக்கமாட்டாத அக்நிஹோத்ரிகள் தத்தகபித்தகதாலேலோ என்கிற முறையில் ஏதோஎழுதிவெளியிட்டிருக்கிறார். காஞ்சீபுரம் ஸ்வாமி இரண்டொரு மாதகாலமாய் திருமேனி பாங்கில்லாமல் சயனித்திருப்பதால் இதை எங்கே அவர்கடாக்ஷிக்கப் போகிறார் என்றும் இதற்கு யார் என்ன எழுதப் போகிறார்கள் என்றும் லகுவாக நினைத்த இவர் அஸம்பத்தமாக எழுதியிருப்பதைப்பற்றிச் சுருக்கமாக ஆராய்ச்சி செய்கிறேன். அடுத்த மாதத்திற்குள் ஸ்ரீ ஸ்வாமி திருமேனி பாங்காகி இன்னமும் விளக்கமாக வெளியிட்டருள்வர். இப்போது அடியேன் சுருக்கமாக எழுதுவதும் ஸ்ரீ ஸ்வாமி யருகே யிருந்து சில விஷயங்களைக் கேட்டுக்கொண்டே யெழுதுகிறேன்.

சாரீரகமீமாம்ஸையில் எந்தெந்த விஷயங்கள் சொல்லப்படவில்லை என்று ஸ்ரீ ஸ்வாமி யெழுதியிருக்கிறாரோ அந்தந்த விஷயங்கள் அதில் உள்ளன வென்று

ஒருவராலும் நிரூபிக்க முடியாது. வரிசையாகக் கேட்கிறேன். நாராயண வாஸுதேவ விஷ்ணு சப்தங்களில் ஏதேனுமொன்று ப்ரஹ்மஸூத்ரத்தில் உள்ளதோ? எம்பெருமான் ராம க்ருஷ்ணாத்யவதாரங்கள் செய்தருளினான் என்றுவது உள்ளதா, தயா வாத்ஸல்யாதி கல்யாணகுணங்களை உடையவன் என்றுவது சொல்லியிருப்பதுண்டோ? ப்ரபத்தியைப் பற்றியோ ஆசார்யாபிமானத்தைப் பற்றியோ சொல்லியிருப்பதுண்டா? கைங்கர்ய ப்ரஸ்தாவமாவது செய்திருப்பதுண்டோ! (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) இத்யாதி கேள்விகளுக்கு அக்நிஹோத்ரி நேரில்நின்று பதில் கூறுவாரா?

ஆனால் இவ்வர்த்தங்களை ஆழ்வார்கள் ஸாதித்திருப்பதோ எம்பெருமானார் முதலிய ஆசார்யர்கள் ஸாதித்திருப்பதோ தான்தோன்றித்தனமாகவன்று, வேதங்களையும் வேதோபப்ரும்ஹணங்களையும் கொண்டே யென்பது உலகமறிந்தது. நாம் ப்ராஹ்மணர்களாய்ப் பிறந்து ஓதி வருகிற வேதத்தில் இவ்விஷயங்களெல்லாம் சொல்லப்பட்டே யிருக்கின்றன. "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" "ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:" "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" இத்யாதி வேதவாக்யங்களால் (நாமெல்லாரும் ஓதி வருகிற வேதவாக்யங்களால்) எம்பெருமான் அவதாரங்கள் செய்வதை அறியா நின்றோம். "நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்", "அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" இத்யாதி வேதவாக்யங்களையும் ஓதி வருகிறோம்.

க்ருஷ்ணயஜுர் வேதம் ஆறுவது காண்டத்தில் "ஸ பத்நீ: ப்ராபத்யத........ தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்சந்தி (இருமுறை) ஓதப்பட்டு வருகிறது. "வேதமநூச்ய ஆசார்யோந்தேவாஸிந மநுசாஸ்தி......இத்யாதி ப்ரமாணங்கள் பரச்சதம்.

ஸம்ஸ்க்ருத வேதாந்தமாகக் குலாவப்படுகிற சாரீரக மீமாம்ஸையில் இந்த விஷயங்களுண்டா என்பது ஸ்ரீஸ்வாமியின் திருவுள்ளமேயொழிய ஸம்ஸ்க்ருத வேதங்களிலேயோ வேதோபப்ரும்ஹணங்களிலேயோ, வேதாந்தங்களிலேயோ இந்த விஷயங்கள் கிடையாதென்றும் ஆழ்வாராசார்யர்கள் புதிதாகக் கற்பித்து விட்டார்கள் என்றும் ஓரிடத்திலும் ஸ்ரீஸ்வாமி எழுதவில்லை. சாரீரக மீமாம்ஸையில் இல்லாதவை யென்று ஸ்ரீ ஸ்வாமி நிரூபித்துக்காட்டிய விஷயங்கள் ஆங்காங்கு ஆழ்வாராசார்ய க்ரந்தங்களில் வரும்போது ஆங்காங்கு வ்யாக்யானம் செய்தருளுகிற நம் ஆசார்யர்கள் வேதாந்ததேசிகர் உட்பட வேத வேதாந்தாதி ப்ரமாணங்களைக் காட்டியே யன்றோ உள்ளார்கள். தற்காலம் இதைச் சுருக்கமாக முடிக்கிறேன். ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி யெழுதியுள்ள உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யர் என்கிற வ்யாஸத்திலிருந்து அக்நிஹோத்ரிக்கு என்னலாபம் கிடைத்தது? என்ன வெற்றி கிடைத்தது? என்பதைத் தாமதமில்லாமல் இவர் விரைவில் வெளியிட்டாக வேண்டும். கத்யத்ரயம் எம்பெருமானாருளிச் செய்ததன்று என்று அஸ்தாநே அகாண்டே துஷ்ப்ரசாரம் செய்து வருகிற இவர்க்கு ப்ரமாண லேசமும் கிடைக்காதென்பது திண்ணம்.

---

# அபூர்வார்த்த ரத்ந நிதி

(313. ஸஞ்சிகையின் தொடர்ச்சி)

## 160 பொங்கோதம் சூழ்ந்த :—

எம்பெருமான் உபயவிபூதிநாயகனென்பதை சாஸ்த்ரமுகத்தாலறிகின்றோம். நம்மாழ்வார், ஆண்டாள் ஆகிய இருவரும் இதைப் பேசியுள்ளனர். நம்மாழ்வார் திருவிருத்தத்தில் (33) *அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்று எம்பெருமானுடைய உபயவிபூதி நாதத்வத்தையருளிச் செய்தார் ஆண்டாள் தனது திருமொழியில் (11-3) ' பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுப் சோராமே ஆள்கின்ற வெம் பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்'' என்று அருளியது காண்க. எம்பெருமான் நித்திய விபூதி, லீலா விபூதி ஆகிய இவ்விரண்டையும் தன்னடியாரிட்ட வழக்காக்குவன் என்பதை ''பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ நன்னலப்புள்ளினங்காள்'' என்ற திருவாய்மொழிப் பாசுரத்தால் இனிதறியலாம். ''திவ்யப்ரபந்த மஹாநிதி''யில் இதன் விரிவு காண்க.

## 161 பொன்னிவர் மேனி :—

பெரிய திருமொழியில் (9-2) பதிகத்தின் தொடக்கமிது. திருநாகை ஸௌந்தர்யராஜப் பெருமாள் விஷயமான பதிகமாமிது. திருமங்கையாழ்வார் மற்றைத் திருப்பதிகளுக்குப் பதிகமிடும்போது ''திருக்கண்ணங்குடியுள் நின்றானே'' ''இடவெந்தை யெந்தைபிரானே'' ''பரமேச்சுர விண்ணகரமதுவே'' ''அரங்கமாநகரமர்ந்தானே'' என்று இங்ஙனே திவ்யதேசத்தின் திருநாமத்தை அவ்வப்பதிகங்களின் ஒவ்வொரு பாசுரத்திலும் அமைத்தருளி யிருக்கிறார்; ஆனால் ப்ரக்ருத பதிகத்தில் ''அச்சோவொருவரழகியவா'' என்றே ஒவ்வொரு பாசுரமும் முடிகின்றது. ஆனால் இப்பதிகம் திருநாகைப் பெருமானுக் கிட்டருளியது எனபதை பக்தர்கள் உணர்வதற்காக நிகமனப் பாசுரத்தில் 'நாகையழகியாரை' என்றருளிச்செய்தனர். இதேபோன்று ''வெருவாதாள் வாய் வெருவி'' என்ற பதிகத்திலும் ஸ்ரீரங்க திவ்ய தேசத்தின் திருநாமத்தைப் பாசுரந்தோறும் அருளிச்செய்யாது நிகமனப் பாசுரத்தில் ''திருவரங்கத்தம்மானைச் சிந்தை செய்த'' என்பதனால் திருவரங்கனே பதிகத்திற்கு விஷயபூதனென்றுணர்த்தி யருளினர். அது நிற்க; திருநாகைப்பதிகத்தில் *அச்சோ வொருவரழகியவா !* என்றே பாசுரந்தோறும் பணித்தது. அப்பெருமானுடைய திருநாமம் ஸௌந்தர்யராஜன் என்பதை நன்கு காட்டித்தரும். ... *

## 162 போய்ப்பாடுடைய நின் தந்தையும் தாழ்த்தான் :—

பெரியாழ்வார் திருமொழியில் (2-3) பதிகமிது. கண்ணபிரான் விஷயமாக எத்தனையோ க்ரந்தங்கள் தோன்றியுள்ளன. ஸ்ரீ விஷ்ணுபுராணம், ஸ்ரீ பாகவதம் போன்றவை கண்ணன் கதையைக் கூறுகின்றனவே யொழிய ஆழ்வார்களுடைய அநுபவம் அவற்றுள் காணக்கிடையா. பெரியாழ்வார் மங்களாசாஸனத்தையே தமக்கு நிரூபகமாக உடையவர். கண்ணனுடைய சரிதையை அநுஸந்திக்கும்

போதும் (அதாவது) ஆய்ச்சியாகிய வன்னையின் பாவனை யேற்றபோதும் பெரியாழ்வார் தம்முடைய பண்பை விடாமலிருப்பது அநுபவரஸிகர்கட்கு இன்சுவை பயப்பதாம். *போய்ப்பாடுடைய* என்னுமிப்பதிகம் யசோதைப்பிராட்டி தன் மகனை கண்ணனைக் காதுகுத்த அழைப்பதாக அமைந்துள்ளது. முதற் பாசுரத்திலேயே பெரியாழ்வார் தமது முத்திரையைப் பதிக்கின்றார். "போய்ப்பாடுடைய நின் தந்தையும் தாழ்த்தான் பொருதிறற் கஞ்சன் கடியன் காப்பாருமில்லை கடல் வண்ணா வுன்னைத் தனியே போயெங்கும் திரிதி" என்று வயிறுபிடிக்கிறார். கூர் வேல் கொடுந்தொழிலனான நாயகன் நந்தகோபனும் பசுமேய்ப்பினின்றும் மீண்டிலன். கம்ஸனோ கடியன். நின்மேல் கறுக்கொண்டவன். நீயோ தனியே எங்கும் திரிந்து விளையாடுகின்றாய். உன்னைக் காப்பாராருளர்?" என்று பெரியாழ்வார் அருளிச்செய்தவிது ஆழ்ந்து அநுபவிக்கத்தக்கது.

## 163 பௌவமெறிதுவரை :—

பெரியாழ்வார் திருமொழியில் (4.1-6) பாசுரத்தில் "பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை" என்றருளிச்செய்கிறார். துவரை என்றது த்வாரகையை. த்வாரகை கடலில் மூழ்கிவிட்டதாகச் சிலர் கூறுவர். அது தவறான கருத்து. 'பௌவமெறிதுவரை' என்பதற்குச் 'கடலலைகள் மோதும் படியான த்வாரகை" யென்பது கருத்து. அவ்வாறே கடற்கரையிலுள்ள த்வாரகையை இன்றும் ஸேவிக்கின்றோம். கடலுறையும் சென்றினிது ஸேவித்து மகிழ்ந்ததுண்டு. நம்மாழ்வார் திருக்கண்ணபுரத்தை மங்களாசாஸனம் செய்தருள்கையில் "வேலை மோதும் மதிள்சூழ் திருக்கண்ணபுரம்" என்கிறார். திருக்கண்ணபுரத்திலுள்ள வெள்ளியேய்ந்த மதிள்மேல் கடலலைகள் மோதுகின்றன வென்றபடி. திருக்கண்ணபுரம் கடற்கரையில் இப்போது அமைந்திருக்கக் காண்கின்றிலோம். ஆழ்வார் காலத்தில் கடலும் கடல்வண்ணனான கண்ணபுரத்தெம்பெருமானுடைய கடிமலரடியிணையில் கிடந்திருந்தது போலும்!

## 164 மடியடக்கி நிற்பதனில் :—

பெரிய திருவந்தாதியில் முப்பதாம் பாசுரம் வருமாறு:—"இங்கில்லை பண்டு போல் வீற்றிருத்தல் என்னுடைய செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம் அங்கே மடியடக்கி நிற்பதனில் வல்வினையார்தாம் ஈண்டடியெடுப்பதன்றோ வழகு?" என்று எம்பெருமானுடைய ஸௌலப்ய குணத்தை அநுஸந்தித்த ஆழ்வார் அவ்வநுபவம் திருவுள்ளத்தில் தாங்கமுடியாதபடி விஞ்சவே அந்த ஆனந்தத்தினால் பாவங்களைக் குறித்துப் பேசுகின்றார்.

பாவங்களே! இதுவரையில் நீங்கள் என்னுடைய நெஞ்சை உங்களுக்கு வாஸஸ்தானமாக ஆக்கிரமித்துக் கொண்டு உங்களுடைய பெருமையெல்லாந் தோற்ற விசாலமாகக் கிடந்தீர்கள்; நான் பகவத் விஷயவாஸனை யறியாத காலத்தில் நீங்கள் என் நெஞ்சில் குடியிருந்தீர்களத்தனை; இனி அப்படியிருக்க முடியாது; ஏனென்றால், இப்போது என்னெஞ்சு பகவத்குணாநுபவம் பண்ணத் தொடங்கிவிட்டது. * "உயர்வறவுயர் நலமுடையவன்" என்றபடி அநந்த கல்யாண குணத்

மகனுன அப்பெருமானுடைய குணங்களுக்கே இங்கு இடம் அற்பமாயிருக்கும்போது உங்களுக்கு இங்கே இடம் கிடைக்க ப்ரஸக்தி ஏது? —என்றிப்படி ஆழ்வார் பாப ராசிகளை சேதநஸமாதியாமல் விளித்துச் சொன்னவாறே, அவை "ஆழ்வீர்! நெடு நாள் இங்கே பழகிக்கிடந்த எங்களை இன்று இப்படி அடித்துத் துரத்தி விடலாகாது; உமது நெஞ்சில் எங்களுக்கு முன்போல் விசாலமாக இடம கிடைககாவிட்டாலும் ஒரு மூலையில் பதுங்கி நிற்கும்படி மிக்க சுருக்கமான இடம் கிடைத்தாலும் எங்களுக்குப் போதும்; அரைத்துணிகளை இடுக்கி நெருக்கிப் பிடித்துககொண்டு ஒரு மூலையிலே மழைக்கு ஒதுங்கி நிற்பாரைப்போலே நாங்கள் கஷ்டப்பட்டுக்கொண்டாகிலும் ஒருபக்கமாகக் கிடக்கிறோம்; எங்களை விலக்காமல் இடங்கொடுத்துக் காத்தருளவேணும்" என்று பணிந்து வேண்டிக்கொள்ள, பின்னடிகளால் அதற்கு மறுமொழி கூறுகிறார்—பெருமை தோற்ற நன்றாக வாழ்ந்தவர்கள் அப்படி வாழமுடியாமல் கஷ்டப்படநேர்ந்தகாலத்துக் கண்மறைய ஓடிப்போய் விடுவதன்றோ அழகு என்கிறார்.

## 165 மலைக்கு மேன்மலை விளக்காமழகா :—

அழகர் கலம்பகத்தில் காணும் அழகொழுகும் தமிழ்ப்பாடலொன்று 'மலைக்கு மேல்' என்று தொடங்குவதாம். பாடல் வருமாறு:—"மலைக்குமேன்மலைவிளக்காம் அழகா வேத வான்குதலை நான்குதலை மகனார் வாளா, தலைக்கு மேல்எழுதுகின்றார் அரியென்றெங்கள் தாலத்தின் மேலெழுதச் சமர்த்திலாரோ, அலைக்குமேல் உடு மலராமிதக்குங்காலம் ஆலமொன்று காயாம்பூவலர்ந்தாற் போற்பச், சிலைக்கு மேற் செங்கண்வளர் அனந்தானந்தா இருக்கிலிருக்கும் பொருளே யெம்பிரானே!" இப்பாடலின் சுவைமிக்க பொருள் கேண்மின். மாலிருஞ்சோலை மேய மணி விளக்காம் அழகனே! (உன்னிடம மறைகளையோதி உணர்ந்தவனாகிய) உன் மகனாகிய பிரமதேவனது செயலைச் சொல்லுகிறேன் கேள். அவனுக்கு ஏதோ எழுத வேண்டுமென்று தோன்றியது. உடனே எங்களது வலிய தலையில் பயனில்லாத வற்றை எழுதிவிட்டான். (ப்ரஹ்ம லிபி, தலையெழுதது என்பது) மெல்லிய எங்கள் நாவில் 'அரி' என்ற இரண்டெழுத்தை எழுதலாமாயிருக்க, பேதைமை நிறைந்த செயலை அவன் செய்தனனே. ஒரு தலைக்கு நான்கு தலைகளாகப் பெற்றிருந்தும் உன் மகன் இவ்வாறு செய்தது அவனது குதலைச் சொற்களுக்கு இணங்கியேயுள்ளது" என்று. 'அரி' என்று எம்பெருமான் திருநாமத்தைக் கூறி உஜ்ஜீவித்துப் போகாத எங்கள் விதி இருந்தவாறிது' என்பதனைச் சமத்காரமாகக் கூறினார் புலவரென்க.

## 166 மலையுங் கடலும் பொருந்தமிழ்ச் சோலைமலையரசே :—

இது அழகர் கலம்பகப் பாடலொன்றின் ஈற்றடியாம். பாடல் வருமாறு: "இலையும் பசும்புல்லும் செஞ்சூட்டரவும் இடைச்சி மடித்தலையும் சயனங்கொண்டீர் அடியேன் மனத்தாமரையில் அலையுஞ் செயலொழித்திங்கிருந்தாலென்ன வஞ்சனமா மலையுங் கடலும் பொரும் தமிழ்ச்சோலை மலையரசே". சோலைமலைப் பெருமானே! நீர் இராமாவதாரத்தில் வானரஸேனையுடன் இலங்கை செல்லவேண்டி

வருணனை வழிவேண்டி கடற்கரையில் தர்ப்பசயனத்தின்மீது இருந்தீர். ஊழிதோறூழியும் ஆலினிலையதன்மேல் கண்வளர்ந்தருளினீர். இவ்வாறு புல்லிலும் இலையிலும் பள்ளிகொண்ட நீர் அடியேன் நெஞ்செனும் கஞ்சமலரிலும் வந்திருந்தால் என்ன குறையுண்டாம்? என்று வினவுமிது இன்சுவையுடைத்து.

## 167 மாவையிரந்திருவேங்கடத்தோங்கு மரகதமே :—

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பணித்த திருவேங்கடத்தந்தாதியிலுள்ள பாசுரம் (92) இது. பாசுரம் வருமாறு. "பாவையிரங்குமசோதைக்கு முத்துப் பதுமச்செல்விக் கேவையிரண்டன்ன கண்மணி நீலமிருசரணப் பூவையிரந்தவர்க்கின் பவளம் புல்லசுரர்க்கென்று மாவையிரந் திருவேங்கடத்தோங்கு மரகதமே". திருவேங்கடமலையில் மரகதமொன்று உள்ளது. அம் மரகதமே முத்தாகவும், நீலமணியாகவும், பவளமாகவும், வைரமாகவும் திகழும் அதிசயத்தை என்னென்பது! நிறத்தாலும் ப்ரகாசத்தாலும் திருவேங்கடவன் மரகதத்தை ஒக்கின்றான். இவனே யசோதைப்பிராட்டியின் நன்மைந்தனாகத் தோன்றியபோது முத்தென அவளால் போற்றப்பட்டனன். திருமாமகளுக்குக் கண்மணி நீலமாவான். (பிராட்டிக்குக் கண்ணின் கருவிழியனையான் என்க) திருவடியிணைகளைப் பிரார்த்திக்கும் அடியவர்க்கு இன்பவளமாகிறான். ('இன் பவளம்') என்று பிரித்து 'பவளம்' என்ற பொருளும் 'இன்ப வளம்' என்று பிரித்து பேரின்பப்பெருவளம் என்ற பொருளும் காண்க. அசுரர்க்கு வைரமாகிறான். (வைரம்—(1) இரத்தின விசேஷம் (2) பெரும் பகை என்ற பொருள்கள் காண்க) எனவே மரகதமொன்றே ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவகை இரத்தினமாக விளங்குவதாகக் கூறியவிது சுவைமிக்கது.

## 168 மின்னனைய நுண்ணிடையார் :—

பெரியாழ்வார் திருமொழியில் (2-2-6)ஆம் பாசுரத்தொடக்கம் இது. ஸ்ரீவில்லிபுத்தூரை மங்களாசாஸனம் செய்தவர்கள் இருவரே. பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரைப்பற்றி யருளிச்செய்யும்போது ஆண்டாளுடைய பெருமையை அதில் அமைத்தருளினர். ஆண்டாளுடைய பாசுரத்திலும் (ஸ்ரீவில்லிபுத்தூரைப் பற்றிய பாசுரத்தில்) பெரியாழ்வாருடைய பெருமை கூறப்பட்டுள்ளது. ப்ரக்ருதம் பெரியாழ்வார் பாசுரம் கேண்மின். "மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்" என்பது பெரியாழ்வார் பாசுரப் பகுதி. வடபெருங்கோயிலுடையான் ஆண்டாளுடைய திருக்குழலிலே படிந்த பூமாலைகளை மிக விரும்பினன் என்பது விசதம். அதனையே இங்கு அருளிச்செய்தனர் பட்டர்பிரான். மின்னனைய நுண்ணிடையார் ஆண்டாள். அவருடைய விரிகுழல்மேல் நுழைந்த வண்டு வடபத்ரசாயி. "தூவியம் புள்ளுடைத்தெய்வ வண்டு" என்று எம்பெருமான் வண்டாகக் கூறப்பட்டது காண்க. எனவே ஆண்டாளுடைய பெருமை இதில் காணப்படுவது ரஸிகர்கட்கு அருவிருந்தெனக. ...

## 169 மீன்நோக்கும் நீள்வயல்சூழ் :—

பெருமாள் திருமொழியில் ஐந்தாம் பதிகத்தில் மூன்றாம் பாசுரத்தின் தொடக்கம் "மீன் நோக்கும் நீள் வயல்சூழ் வித்துவக்கோட்டம்மா" என்பது. திரு

வித்துவக்கோட்டின் நீர்வளத்தை வருணிக்கின்றார் குலசேகராழ்வார். இவ்விடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—"கடலில் மத்ஸ்யம் கடல் வற்றினால் நமக்'ப் புகலிடமென்று நினைத்திருக்கும் தேசமாய்த்து" என்று இதனால் அவ்விடத்து நீர்வளம் ஒப்புயர்வற்றதென்றதாம். இந்த விசேஷணமிட்டதின் குறிப்பால் பரமபதத்திலுள்ளாரும் அதனைவிட்டு வந்துசேரக் கருதும் திவ்யதேசமென்ற சிறப்பு விளங்குமென்று கொள்வது ஸம்ப்ரதாயம்.

## 170 முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் :—

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஆர்த்தி ப்ரபந்தத்திலுள்ள பாசுரமான்று கேண்மின்.

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கந்திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன் கலையுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதுநமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில்நெஞ்சு பேராமல் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே"

மணவாளமாமுனிகள் தமக்குண்டான பெருமையைத் தாமே அருளிச்செய்தாரிதில். பூர்வாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளையே தாம் தஞ்சமாகக்கொண்டவர் என்பதனை 'முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்' என்பதனால் காட்டியருளினர். முன்னோர் மொழிந்தமுறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாம் அதனைப் பேசிய பெருமை மணவாளமாமுனிகட்கு அஸாதாரணமென்க.

## 171 மும்மதத் திருசெவி யொருதனி வேழத்தரந்தையை

திருவெழுகூற்றிருக்கையில் "நாற்றிசை நடுங்க அஞ்சிறைப் பறவையேறி நால்வாய் மும்மதத்திருசெவி யொருதனி வேழத்தரந்தையை ஒரு நாளிருநீர் மடுவுள் தீர்த்தனை" என்பதனால் ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய கதை அநுஸந்திக்கப்படுகிறது. நால்வாய்—நாலுதல்-தொங்குதல், யானைக்கு வாய் தொங்குதல் இயல்பு. மும்மதம் — இரண்டு கன்னங்களிலும் குறியிலும் ஆகமூவிடங்களில் யானைக்கு மதப் புனல் சோரும். இருசெவி — இரு என்று பெருமையைச் சொல்லிற்றாய், பெரிய காதுகளையுடையது என்றுமாம். யானைக்கு வாய் தொங்குதலும் மத நீர் பெருகுதலும் காதுகள் பெரிதாயிருத்தலும் அதிசயமான விஷயமன்றே; இதைச்சொல்லி வருணிப்பதற்கு ப்ரயோஜனம் என்னெனில்;— ஒரு குழந்தை கிணற்றில் விழுந்தபோது, அதனையெடுத்துக் கரையிலேபோட்டவர்கள் "அந்தோ! இதொருகாலழகும் இதொரு கையழகும் இதொரு தலையழகும் இதொரு முகவழகும் என்னே!" என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போவர்களன்றோ; அப்படியே எம்பெருமானும் யானையின் காலை முதலைவாயினின்றும்

விடுவித்த பின் அதனுடைய வாயும் செவியும் முதலிய அவயவங்களின் அழகிலே ஆழ்ந்து கரைந்தமைதோற்ற அந்த பகவத் ஸமாதியால் ஆழ்வார் ஆனையை வருணிக்கின்றாரென்க. இவ்விடத்தில் வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் போக்யதை அனுபவிக்கத்தக்கது:—"நால்வாய் மும்மதத் திருசெவி...என்றாற் போலே சொல்லுவதுக்குக் கருத்தென்னென்னில்; ப்ரஜை கிணற்றிலே விழுந்தால் 'காதுங் கண்டவாளியும் காலும் தலையும் வடிவும் இருந்தபடி காண்!' என்பாரைப் போலே இடர்ப்பட்ட இதினுடைய அவயவங்கள் அவனுக்கு ஆகர்ஷகமாம்படியாலே சொல்லுகிறது" என்ற ஸ்ரீஸூக்தி காண்க.

## 172 மூத்தவற்கரசுவேண்டி.

பெரிய திருமொழியில் ( 4—6—7 ) பாசுரம் "மூத்தவற்கரசுவேண்டி முன்பு தூதெழுந்தருளி" என்றுதொடங்குவதாம். (மூத்தோனாகிய)யுதிஷ்டிரனுக்கு அரசுரிமையைப் பெறுவித்தற்பொருட்டுக் கண்ணபிரான் துரியோதனனிடம் தூது சென்ற வரலாறு இதில் அருளிச் செய்யப்பட்டது. ஸ்ரீ குலசேகராழ்வார் இராமபிரானை "இளையவர்கட்கருளுடையாய் இராகவனே தாலேலோ" என்று இளையவர்கட்கருள்பவனாக (இளையவர்கள்—துர்ப்பலராய் இளைத்தவர்கள், தம்பிகள் என இரு வகைப் பொருள் காண்க) அருளிச் செய்கிறார். எனவே கண்ணன் மூத்தோர்க்கருளுடையவன், இராமன் இளையவர்கட்கருளுடையான் என்று இதுவொரு ரஸோக்தியாகக் கொள்க.

## 173 மூவுலகளந்த சேவடியோயே

நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாசிரியத்தின் முதல் பாசுரம் "மூவுலகளந்த சேவடியோயே" என்று முடிவதாம். நம்மாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களுள் திருவிருத்தம் ருக்வேத ஸாரமென்றும் திருவாய்மொழி ஸாமவேத ஸாரமென்றும் திருவாசிரியம் யஜுர்வேத ஸாரமென்றும் பெரிய திருவந்தாதி அதர்வண வேதஸாரமென்றும் கூறுவர். பெரியோர். யஜுர்வேதம் ஸப்த காண்டங்களையுடையது. திருவாசிரியமும் ஏழு பாசுரங்களாலமைந்தது என்னுமிஃதொன்றினைக்கொண்டே திருவாசிரியத்தை யஜுர்வேதஸாரமென்று கொண்டார்களல்லர் பூர்வாசாரியர்கள். "மூவுலகளந்த சேவடியோயே" என்ற இவ்வடிதன்னிலே மறையின் நறுமணம் கமழ்தலையறிக "உருக்ரமஸ்ய ஸஹிபந்துரித்தா:" என்ற வேத வாக்யத்தில் உலகளந்த வபதாநம் கூறப்பட்டது. அதனையே "மூவுலகளந்த சேவடியோயே" என்பதனால் ஆழ்வார் அருளிச் செய்தனரென்க. விரிவு பிறிதோரிடத்தில்.

## 174 மெய்ம்மலர்தூய்க் கைதொழுதால்

மூன்றாம் திருவந்தாதியில் (76)ஆம பாசுரம் வருமாறு:— ' பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும் ஐந்து நெருப்பிடையே நிற்கவும் நீர் வேண்டா—விருப்புடைய வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்தூய்க் கைதொழுதால் அஃகாவே தீவினைகளாய்ந்து''... பாவங்கள் தொலைந்து நற்கதி பெறவேணுமென்று விரும்பினால் அதன் பொருட்டு உடலை வருத்தி அருந்தவம் ஏதும் புரிந்திட வேண்டாம். மலர்கொண்டு மாயவனைப் பணிந்தால் அதுதன்னாலே கொடுவினைகள் மாளுமென்க

மலரும் நறுமணமுள்ள தொன்றுகத் தேடவேண்டா. "புரிவதும் புகைபூவே" (திருவாய்மொழி 1-6-1) என்றதனுல் கண்டகாலிபும் (முள்ளுடைய பூ) இடவமையும் என்றன்றே பட்டர் அருளிச்செய்தது! ஆர்வத்தோடு இட்டால் எந்த மலராறுலும் எம்பெருமான் உகப்பன் என்க.

## 175 மேலைத்தாம் செய்யும் வினை

பெரிய திருவந்தாதியில் 44-ஆம் பாசுரத்தின் ஈற்றடியிது. பாசுரம் வருமாறு: "வகைசேர்ந்த நன்னெஞ்சும் நாவுடைய வாயும் மிகவாய்ந்து வீழா வெனிலும்—மிகவாய்ந்து மாலைத்தாம் வாழ்த்தா திருப்பரிதுவன்றே* மேலைத்தாம் செய்யும் வினை". இப்பாட்டுக்குப் பிள்ளை திருநறையூரரையர் ஒருபடியாகவும் பட்டர் ஒருபடியாகவும் நிர்வஹிப்பராம். அரையர் நிர்வஹித்தபடி எங்ஙனே யென்னில்;

எம்பெருமானுடைய ஏதோ வொரு குணத்திலும் ஏதோவொரு சரித்திரத்திலும் பொருந்தி நின்ற நல்ல மனமும், அந்த ஒரு குணசேஷ்டிதத்தையே பேசிப் புகழ்ந்துகொண்டிருக்கிற நாவோடு கூடின வாய்க்கும் அப்பெருமானுடைய எல்லாக் குணங்களிலும் எல்லாச் சரித்திரங்களிலும் பொருந்தி மேல் விழுந்து அநுபவிக்கமாட்டா திருந்தனவேயாகிலும், எப்படியாவது கஷ்டப்பட்டு ஸகல குணங்களிலும் ஸகல சரித்திரங்களிலும், நெஞ்சு பொருந்தும்படி செய்துகொண்டு ஸர்வேச்வரனை அநுபவித்து மங்களாசாஸநம் பண்ணவேண்டியிருக்க, அங்ஙனே பண்ணுதிருக்கிருர்கள் ஸம்ஸாரிகள்; இஃது ஏன்? என்றால், முற்காலத்தில் அவர்கள் செய்த பாவமே இதற்குக் காரணம்—என்பதாக (இஃது அரையர் நிர்வாஹம்). பட்டர் நிர்வாஹமெங்ஙனே யென்னில்;—ஆத்மாவினுடைய ஞானம் வெளியில் ப்ரஸரிப்பதற்கு வழியாக அமைந்திருக்கின்ற நெஞ்சும், எம்பெருமானைப் பேசுகைக்கு யோக்யமான நாவோடு கூடிய வாயும் ரஜோ குணமும் தமோ குணமும் மிக்கு ஸ்வயமாகவே பகவத் விஷயத்திற் படிந்தனவில்லையே யாகிலும், 'நம்மை ஈச்வரன் படைத்தது ஏதுக்கு? நமக்குக் கைகால் முதலிய கரண களேபரங்களைக் கொடுத்தது ஏதுக்கு?' என்று ஆராய்ச்சிசெய்து பகவத் விஷயத்திலே பல்லாண்டுபாட இழிய வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் பாழும் ஸம்ஸாரிகள் பகவத் விஷயத்தில் அடியோடு இழியாதிருக்கிருர்களே; இதுவரையில் மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து ஸம்ஸாரிகளா யொழிந்தது போராதா? இனிமேலாவது நல்வழிபோகத்தேடலாகாதா? மேலுள்ள காலமும் நித்ய ஸம்ஸாரிகளாயிருப்பதற்கே யன்றோ இப்படி பாபிகளாய்த் திரிகிருர்கள்!—என்பதாம்.

## 176 மேலால் பரந்த வெயில் காப்பான்

நாச்சியார் திருமொழியில் (14-3) பாசுரத்தின் பின்னடிகள் "மேலால் பரந்த வெயில் காப்பான் வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே" என்பது. கண்ணபிரான் பசுநிரை மேய்ப்புக்குக் காடுகளூடு போகும்போது பெரியதிருவடி அப்பிரான்மீது வெயில்படாதவாறு தன் சிறகுகளால் மறைப்பதனை இதனில் அருளிச்செய்தாள் ஆண்டாள். இதனுல் கருடன் எம்பெருமானுக்கு விதானமாகவும் (மேற்கட்டி) இருப்பது பெறப்படும். ஆளவந்தார் பெரிய திருவடியைப்பற்றி அருளிச்செய்துள்ள (ஸ்தோத்ர ரத்னம்)

"தாஸஸ் ஸகா வாஹநம் ஆஸநம் த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: உபஸ்த்திதம் தேந புரோ கருத்மதா" என்னும் ச்லோகத்தில "விதாநம்" என்று அருளிச் செய்தது ஆண்டாளின் இப்பாசுரத்தை உட்கொண்டே என்க.

## 177 மையார் கருங்கண்ணி :-

திருவாய்மொழியில் (9—4—1) பாசுரம் "மையார் கருங்கண்ணி" என்று தொடங்குவது. பாசுரம் வருமாறு. "மையார் கருங்கண்ணி கமல மலர்மேல் செய்யாள் திருமார்வினில்சேர் திருமாலே வெய்யார் சுடராழி சுரிசங்கமேந்தும் கையா உன்னைக் காணக் கருதுமென் கண்ணே." பெரிய பிராட்டியாரோடும் திவ்யாயுதங்களோடுஞ் சேர்ந்த சேர்த்தியைக் காண்பதற்குத் தமது கண்கள் விடாய்த்திருக்கிற படியைப் பேசுகிறார் இதில் ஆழ்வார். பிராட்டியின் புருஷகாரமானுலொழிய ஈச்வரன் நமக்குப் பேறளிக்கமாட்டான். பிராட்டி எம்பெருமானைத் தன் அழகால் திருத்துவளாதலால் நம்வாழ்ச்சிக்குப் பிராட்டியின் திருக்கண்களே மூலகாரணமென்று அக்கண்ணழகைப் பேசுகின்றாராழ்வார் (மையார் கருங்கண்ணி) என்று. ஸ்ரீராமாயணத்தில் 'அஸிதேக்ஷணா' என்று பலகாலுஞ் சொல்லுகிறபடியே பிராட்டி இயற்கையாகவே கருங்கண்ணி. மையிட்டுக் கருமை ஸம்பாதிக்கவேண்டியதில்லை. ஆயினும் மங்களார்த்தமாகவே மையிடுகிறபடி. இப்பாசுரத்தில், முன்னடியிற் பெரிய பிராட்டியாருடைய சேர்த்தியைச் சொன்னவுடனே திருவாழி திருச்சங்குகளின் சேர்த்தியை மூன்றாமடியினுற் சொல்லுகையாலே இதிலிருந்து கண்ட ஒரு ரஸ விசேஷத்தை நம்பிள்ளையருளிச் செய்கிறார் காண்மின். "இவள் கையில் லீலாரவிந்தம் அவனுக்கு போக்யமாயிருக்குமாபோலேயாயிற்று அவன் கையில் திவ்யாயுதங்கள் இவளுக்கு இனிதாயிருக்கும்படி" என்று. இத்தால் பிராட்டி பூவேந்தியிருக்குமாபோலே எம்பெருமான் ஆயுத விசேஷங்களை ஏந்தியிருக்கிறபடி என்றதாயிற்று. "ஏந்துங்கையா" என்கையாலே வெறுந்திருக்கைகளையும் வெறுந் திவ்யாயுதங்களையுமன்றிக்கே இரண்டுஞ் சேர்ந்த சேர்த்தியையே தாம் காண வாசைப்பட்டிருப்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று.

## 178 மொய்ம்மாப்பூப் பொழிற்பொய்கை

திருவாய்மொழியில் (3-5) பதிகம் "மொய்ம்மாப்பூப்பொழிற் பொய்கை" என்று தொடங்குவது. எம்பெருமானுக்கு அன்பாலாட் செய்பவரை ஆதரித்தும் அன்பிலா மூடரை நிந்தித்தும் பாசுரங்கள் அருளிச் செய்கிறாராழ்வார் இப்பதிகத்தில். இப்பதிகத்தில் முதற்பாசுரத்தில் ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தருளின எம்பெருமானுடைய ஆச்ரித வாத்ஸல்யத்தை யநுஸந்தித்தும் விகாரமடையாதிருப்பாருடைய பிறப்பு வீண் என்கிறார். நம்பிள்ளையீடு கேண்மின்; "பட்டர் இவ்விடத்தை அருளிச்செய்யா நிற்கச் செய்தே 'அவன் நூறாயிரஞ் செய்தாலும் விக்ருதராகாமைக்கு நாமே வேணும், நமக்கொரு ஆபத்து உண்டானால் இருந்தவிடத்திலே யிருக்கமாட்டாதே விக்ருதனுகைக்கும் அவனே வேணும்' என்றருளிச் செய்தார்" என்று. எம்பெருமானைப் போன்ற பரமதயாளு இல்லை; அவனது தயையில் ஈடுபடமாட்டாத நம்மைப்போன்ற வன்னெஞ்சருமில்லை என்றபடி. ... *

[தொடரும்]

# ஸ்ரீ வைஷ்ணவ ஸம்மேளனம்

(ஸ்ரீ காரப்பங்காடுஸ்வாமீடிரஸ்டின் ஆதரவில்)

ஸ்ரீ வைஷ்ணவத்தின் வளர்ச்சிக்கு ஆவன செய்வதற்கு ஸம்மேளனம் ஒன்று சென்னையில் (22—3—75ல்) நடைபெறும். ப்ரபல பத்ரிகாதிபர்களும் உபந்யாஸகர்களும் அதில் கலந்துகொள்வார்கள்.

கருத்தரங்கு நடைபெறும்.

இடம்:— மயிலை மாதவப்பெருமாள் ஸந்நிதி.

நேரம்:— மாலை 3 மணி.

அன்பர்கள் கலந்துகொள்ளுமாறு ப்ரார்த்திக்கப்படுகிறார்கள்.

(ம. பா.)

# BOOKS REVIEW

The Philosophy of Sri Ramanuja by Sri V. R. Srisaila Chakravarti (Coimbatore) Published by Sri V. S. R. Chakravarti, 21, Kasturi Ranga Iyengar Road, Madras-18. Price Rs 40-00.

The author was a great scholar in Sanskrit, Tamil and English and had a mastery over the various texts relating to Visistadwaita, having studied them under learned teachers. He is an author of several books on the subject and the one under review is perhaps the best among them. Herein he describes the most salient points of Visishtadwaita under the topics Cit, Acit and Iswara (or Soul, Matter and God).

Sri Ramanujacharya's Sri Bhashya does not discuss, in fullness, the nature of these three entities, because the Brahmasutrakara does not do it. Sri Yamunacharya's Siddhitraya, Sri Lokacharya's rahasyas (especially Tatwatraya) and some Sanskrit and Tamil works of Sri Vedantacharya have done full justice to the subject. The book under review gives in a cogent way, all that is contained in these and other works of our Purvacharyas, including Sri Bhashya. The presentation is lucid and attractive. The author walks strictly in the path trodden by them and does not deviate from it in the least, which is the greatest merit of this book, and makes it authentic. I heartily recommend its use to students and scholars of Visistadwaita philosophy, who prefer to study it in a foriegn language, rather than in their own mother tongue. Even a scholar who studies this book carefully, is sure to find out a rare gem here and there, which he has not, perhaps, come across in other books. As the publishers say, works on Visistadwaita are comparatively few. The present book is worthy of preservation in every Oriental Library. —*T. A. S.*

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கேடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503.

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM. Pin Code631503



To

Sriman / Srimathi

135 Sri M. K. Rangaramanujam,
29, Mosque Street,
Saidapet, Madras-15.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.